



# திருவருணைப் பாமாலைகள்

சென்னை

சிந்தாதிரிப்பேட்டை

**ஷண்முக பக்தஜன சபையாரால்**

**விக்ரம௵ கார்த்திகை௴ 27உ**

**12—12—1940**

கார்த்திகை தீபத்தன்று

அன்பர்கட்கு விநியோகிக்கப்பெற்றன.

உ

ஸ்ரீ அருணசலேசுவரர் துணை

அன்பர்கள் இயற்றிய

இருபத்தெட்டாவது வருடத்திய

# திருவருணைப் பாமாலைகள்



இவை

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை,

**ஷண்முக பக்தஜன சபையாரால்**

[விக்ரம ஸ்ரீ கார்த்திகைமீ 27உ]

(12 - 12 - 1940)

கார்த்திகை தீபத்தன்று

அன்பர்கட்கு விநியோகிக்கப்பெற்றன.

உ

# யானை திறைகொண்ட விநாயகர் துதி

## காப்பு

### வெண்பா

கங்கையணி செஞ்சடிலக் கண்ணுதலண் ணாமலைமேற்
றுங்கமுள பாமாலை சூட்டிடவே—பங்கமிலா
யானைதிறை கொண்டவனென் றன்ப ரியம்புபெரு
மானையகத் தேகொள்ளு வாம்.

உ

ஸ்ரீ அருணாசலேசுவரர் துணை.

குகமயம்.

# திருவருணைப் பாக்கள்


வித்வான் T. P. மீனாட்சிசுந்தரனார் M.A.B.L.M.O.L.

(Alderman, Corporation of Madras)

அவர்கள் இயற்றியது


அண்ணா மலையானே ஆறுபாய் நின்முடியை
நண்ணா தலைந்தானும் நான்முகன்றான்—கண்ணால்
அதனைப் புவிகாண ஆனாய் மலையாய்
இதனைப் புகழ்வதெங்ஙன் இன்று. (1)

விண்ணோர்க் கரியனென வேதங்கள் நின்றலைய
மண்ணோர்க் கெனமலையாய் வந்தோனே—கண்ணாகி
நல்வழியே காட்டுமெங்கள் நாயகனே சிற்றடியோம்
அல்வழியிற் சேராமே ஆள். (2)

நான்குபேர் சென்றவழி நாங்கள் செலுமாறும்
வான்குரவர் சொன்னபடி வாழ்மாறும்—தான்பணியாய்
பேரறிவாம் சீரொளியாய்ப் பேச மலைவிளக்காய்
நேரறிய நிற்பவனும் நீ. (3)

எவ்வுயிரும் நின்வடிவாய் என்றுமடி யேங்காண
செவ்வியநின் சீரருளே செய்தருளாய்—அவ்வியஞ்சேர்
உள்ளத்தார் காணாமே ஓங்குமலை யாயொளித்த
கள்ளந்தான் என்னோ கழறு. (4)

எம்மொழிகள் நின்புகழா எஞ்செயல்கள் நின்பணியாச்
செம்மைச் சுவைகள் சிவச்சுவையா—எம்மாடும்
நின்றெழுந்த எவ்வொலியும் நின்னாமை நல்லெழுத்தா
இன்றருணை யானே இயம்பு.

குகமயம்

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை,

## திருமயிலை - பாலசுந்தரம் செட்டியார் அவர்கள் இயற்றியது.

### விநாயகர் துதி

எம்மா னருணகிரி யீசன்பாட் டிற்கருளுங்
கைம்மா முகனற் கழல்.

### முருகன் துதி

பூவா ரருணைப் புகுவார் தமையே
பாவா லியம்பும் பரிசின் றடைவேன்
காவான் மலியுங் கவினுர் செந்தில்
தேவா ரடிகள் சிரமேற் கொளுவாம்.

### குரு சேஷாத்திரி சுவாமிகள் துதி

எல்லா ரருணை யிறைவன் றனைப்பாட
நல்லசே ஷாத்திரியை நாடு.

### நூல்

திருவளருஞ் சொல்லிற் சிறப்புறமே பூவிற்
பெருமைதரும் பேறும் பிறங்குக்—தருவளருந்
தண்டலைசூ ழுந்தடங்கள் சாருந் திருவருணை
அண்டர்பிரான் றுளடைந்தார்க் காம். (1)

பொல்லாக் குணமுடையேன் போற்றும் வகையறியேன்
எல்லாம் பொறுக்கு மிறையோனே—பல்லோர்
தனைச்சூழ நிற்குந் தனியருணை யானே
எனைச்சூழ்ந் தளித்திடுக வின்று. (2)

என்றும் நினதருட்கே யேங்கிக் கிடப்பேனை
மன்றுள் நடம்புரியு மாமணியே—கன்றின்
விளவெறிந்தோன் போற்றும் வியனருணைத் தேவே
வளம்பெறச்செய் தேயருள்க வந்து. (3)

ஆதரவே தேடி யலைகின்றோர்க் கின்னருளே
போதரவே வேண்டிப் புவியதனிற்—பூதரமாய்
நின்று னருணை நினைத்து வலம்வரவே
சென்றோ ரடைவர் சிறப்பு. (4)

## விருத்தம்

அன்ன மேந்து மவனடி காண்கிலாச்
சொன்ன மேனியன் சோண சயிலனைக்
கன்ன லென்னக் கனிந்திடு வான்றனை
உன்னு முள்ளத் துவகையி னோங்குவாம். (5)

உ

வேலுமயிலுந் துணை

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை

**சி. கல்யாணசுந்தர செட்டியார் அவர்கள் இயற்றியது.**

## காப்பு

### வெண்பா

சீரா ரருணைவளர் தேவனடிக் கேயான
நாரார் தமிழ்மாலை நன்கமையக்—காரார்
குழல்வள்ளி யைக்குமரன் கூடிடமுன் சென்ற
மழைமதமார் மாமுகன்றாள் வாழ்த்து.

## நூல்

### விருத்தம்

சோதி திகழு மதியரவுந்
தோன்றுங் கங்கைச் சடைமுடியுந்
துலங்குந் திரிபுண் டரநுதலிற்
றாய நயனத் திருமுகமும்
பாதி யுமைசேர்ந் தொளிர்மெய்யும்
பனகா பரணச் சதுர்புயமும்
பத்த ரகமா மலர்த்தாளும்
படிமீ தெற்குக் காட்டாயோ
நீதி யிருக்கு மொருகடவுள்
நின்போ லெங்குங் கண்டறியேன்
நீல கண்ட னென்னரும்பேர்
நிலைத்த தொன்றே சான்றன்றோ
ஆதி யிருக்கு முதன்மறையும்
அமரர் கணமுங் கொண்டாடும்
அகில நங்கைக் கொளிர்முடியாம்
அருணைப் பதிவாழ் பெருமானே (1)

வஞ்சங் குடிகொள் நெஞ்சகத்தேன்
வழுத்தே னின்னை நாவார
வாளா நாளைக் கழித்திருக்கும்
வகையி னேக்கை விடமாட்டேன்
பஞ்சை நிகர்மெல் லடியென்றும்
பதுமத் தளிராங் கரமென்றும்
பாவை யன்னார் தமையுள்ளிப்
பாடிப் புகழ்வே னுயிடினுந்
தஞ்ச மென்றே வந்தடையுஞ்
சமய மறிந்தே தயைசெய்வாய்
தனயர் குற்றந் தாங்காத
தாயு முண்டோ தாரணிக்கே
அஞ்சக் கரமா மந்திரத்தை
அடியர் வாய்விட் டேயுரைத்தே
அங்கை கூப்பி வலம்புரியும்
அருணைப் பதிவாழ் பெருமானே. (2)

வினையின் வழியாம் பிறப்பதனை
வேண்டா துன்றன் றுள்வேண்டி
மிகுபே ரடியார் பெருவாழ்வை
மேவக் கேட்டு முலகியல்வாழ்
வினையே விரும்பி யுடற்பேணும்
விதமே புரிந்திங் கெஞ்ஞான்றும்
வீணே யுழலும் புன்மைபுரி
வினையேற் குன்ற னருளென்றே
நினைவா ருள்ளத் தொளிர்விளக்கே
நிமலா முத்திக் கொருவித்தே
நெடிய மாலு மலரயனு
நேடிக் காணுச் சோதியனே
அனையா முண்ணு முலைத்தாயாள்
அமரும் பாகத் தழகோனே
அன்ன மளிக்குஞ் சாலைநிறை
அருணைப் பதிவாழ் பெருமானே. (3)

வந்தோர்க் கில்லை யென்னாது
வழங்கக் குறையா வளர்நிதியு
மாற்றார்க் கஞ்சா நெஞ்சமுநோய்
மருவா திடமெய் நிறையாயுள்
சிந்தா குலமற் றுவகையதே
சேரும் வாழ்வும் பேரறிவுந்
தீமை யணுகாக் குணமுடனின்
திருத்தாட் கன்புஞ் சிறியேற்குத்
தந்தாள் செந்தில் வருகந்தன்
தந்தாய் தாயே எவ்வுயிர்க்குஞ்
சதுர்மா மறையி னுட்பொருளே
தனித்தே யளிக்கும் பெருந்தேவே
அந்தா மரையிற் சங்குயிர்த்த
அருநித் திலத்தை அண்டமென
அனப்பே டடைகாக் குந்தடஞ்சூழ்
அருணைப் பதிவாழ் பெருமானே. (4)

மனமாம் பரிமீ தாசையெனும்
வஞ்சக் கள்வ னிவர்ந்ததனை
வகையைம் புலனும் புன்மைசெறி
வழிகள் பலவாம் வனத்திடத்தும்
சினமாங் கொடிய குன்றகத்துஞ்
செருக்காஞ் சறுக்கும் பள்ளத்துஞ்
செறிமா மயலா மிருட்டகத்துஞ்
செலுத்தித் துரத்திச் செல்கின்றான்
கனமைந் தெழுத்தாம் படைக்கலத்திற்
கடிதே தாக்கி மீட்டதனை
கருது மதியாங் கொட்டகையிற்
கட்டி இன்பம் பெறஅருள்வாய்
அனலார் வேள்விச் சாலைதொறும்
அந்த ணேர்சொல் வேதமொலி
அமரா பதியுங் கேட்டுமகிழ்
அருணைப் பதிவாழ் பெருமானே (5)

ஒன்று யுருவ மிரண்டாகி
உயருந் தேவோர் மூன்றாகி
ஒலிக்கு மறைக ணான்காகி
ஓங்கும் பூத மைந்தாகி
நன்றுங் கலைக ளாறாகி
நண்ணும் புவிக ளேழாகி
நவிலுந் திசைக ளெட்டாகி
நற்கோ ளண்ட நவமாகி
குன்று வளரின் பத்தினையே
கொடுத்தாள் வள்ளற் கோமானே
குற்றம் பலவும் நீபொறுத்தென்
குறைதீர்த் தின்ப வாழ்வளிப்பாய்
அன்றோ ரிரவிற் சுந்தரன்சொல்
ஆசைக் கேகுந் தூதுவனே
அகில விளக்கா யுயர்சோதி
அருணைப் பதிவாழ் பெருமானே (6)

தினத்தி லேயோர் தரமேனுஞ்
செறிமா மலர்கள் கொண்டுன்றன்
திருமா மந்த்ர நாவோதித்
தெளிவா யருச்சனைசெயவும்
மனத்தை யடக்கிக் கணமேனு
மாறாத் தியானஞ் செய்திடவும்
வளரு நின்றன் திருக்கோயில்
வந்து பணிந்தே வலஞ்செயவுங்
கனத்த விடையூர் காட்சியினைக்
கண்கள் கண்டே களித்திடவுங்
கடையேன் வேண்டு வரமருளிக்
காப்பாய் கருணை வாரிதியே
அனந்த னோடு முவணத்தன்
ஆய்தற் கரிய வடிவாகி
அருவா யுருவா யெங்குநிறை
அருணைப் பதிவாழ் பெருமானே (7)

மண்ணு ளாசை வெறிகொண்டே
வளர்ந்த சமரிற் பல்லுயிர்கள்
வாளா மாளும் வகைகண்டும்
மனந்தா னிரங்கித் தடுக்கும்வழி
பண்ணு யுலகி லின்பமுறப்
பரதத் திருத்தாய் மக்களெலாம்
பயமின் றினிதாய் வாழவரம்
பாலித் தருட்கண் பார்த்தருள்முக்
கண்ணார் மணியே முக்கனியே
கனியின் ரசமே செந்தேனே
கனிந்த பாகே கற்கண்டே
கரும்பின் சுவையே கற்பகமே
அண்ணார் புரங்க ளொருமூன்றும்
அழியச் சிலையாச் சிலைகொண்ட
அடல்சேர் வாகை புனைதோளாய்
அருணைப் பதிவாழ் பெருமானே. (8)

இடையிற் புலியி னுடையாட
எழின்முப் புரிநூன் மார்பாட
இருதோள் கடகப் புயமாட
இலகு செவியிற் குழையாடத்
தொடையிற் பொலிசெஞ் சடையாடச்
சொரிநீர் அரவும் பிறையாடச்
சுரக்குங் கருணை முகமாடத்
துணைத்தாள் மலர்கள் நடமாடிக்
கடையேன் கண்கள் களியாடக்
காட்சி யளிக்கும் நாளுளதோ
கணமா யடியார் நின்றுபணி
கனக சபைவாழ் தாண்டவனே
அடைவி லாத கதவமுடை
அறமா மடங்கள் நிறைந்தெங்கும்
அழகே விளங்கு முயர்சோதி
அருணைப் பதிவாழ் பெருமானே. (9)

எடுத்தற் கரிய பிறவியெனும்
இம்மா னுடத்தி லியற்றவரும்
இம்மைப் பயனை யறியாதே
இருந்தே நாளை வீணாக்கி
உடுத்தி யுண்டும் மடநல்லார்
உருவை யுன்னி யுறக்கத்தும்
உளங்கொண் டுழன்றே ஒன்றுக்கும்
உதவா விதஞ்செய் வினையனைக்கை
விடுத்தல் செய்யா தேற்றருள்வாய்
விகிர்தா வேறு துணைகாணேன்
வெள்ளென் பிணையு மணியாக
வேண்டுங் கடவு ணீயன்றோ
அடுத்து வருங்கால் கூற்றுவனார்
அம்மை யுடனே னெதிர்வந்தே
அஞ்ச லென்றே ஆதரிப்பாய்
அருணைப் பதிவாழ் பெருமானே. (10)

---

## சென்னை, கந்தன் பஞ்சகம்

### கட்டளைக் கலித்துறை

கந்தா குமரா கதிர்வே லவநின்றன் காட்சியென்கண்
தந்தே யருளத் தருணமி தேநற் றவைபுரிவாய்
கொந்தார் கடப்ப மலர்மாலை சேர்புயக் கொற்றவனே
சிந்தாப் புகழ்மிகு சென்னையின் மன்னித் திகழ்பரனே. (1)

பரனே நினையன்றி மற்றொரு தேவைப் பணியகில்லா
வரமே யருள்முரு கையா வளைகடன் மானிலத்தே
சிரமே யொருப துடையானைச் செற்றவன் சீர்மருகா
தரமே வியதிருச் சென்னையம் நன்னகர் சார்குருவே. (2)

குருவா யரற்குப் பிரணவ மோதுங் குமரநின்றுள்
மருவார் மரையென் மனத்தடத் தென்று மலர்ந்திடுங்கொல்
அருவாய் உருவாய் அளிக்கும் அறுமுகா ஆதரிப்பாய்
திருவார்ந் தொளிர்மிகுஞ் சென்னையில் வாழ்ந்திடுந்
தேவதையே. (3)

தேவர்கள் வாழ்வுறப் போர்மிகு சூர்கிளை செற்றவைவேல்
பூவலர் கூந்தல் இருமட வார்சேர் புயத்தழகா
சேவலங் கையாய் சிறிதருள் செய்வாய் திகழ்மயிலோய்
காவல்க ளெங்கும் நிறைந்திடுஞ் சென்னையிற் கந்தப்பனே.

அப்பனு மாயு மருங்கிளை நீயே என அடைந்தேன்
இப்புவி தன்னி லிரங்கிப் பரிந்தே இனிதருளாய்
ஒப்புயர் வில்லா ஒருபெருந் தேவா உமைசிறுவா
செப்பருஞ் சீர்த்தி மலிந்திடுஞ் சென்னைவாழ் தேசிகனே.(5)

## குரு சேஷாத்திரி யடிகள் துதி

தென்னருணை யேயிடமாத் தேடியடைந் தேநமக்கு
மன்னுதரு வானபெரு மாதவனும்—பன்னரிய
நன்னிலைக்க ணின்றின்ப நண்ணுசே ஷாத்திரிதாள்
உன்னிநிதம் நெஞ்சமே ஓது.

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை, அரிசி மண்டி,

**சி. மு. கன்னப்ப செட்டியார் அவர்கள் இயற்றியது.**

## காப்பு

மன்னுபுக ழண்ணு மலையான் மலரடிக்கே
பன்னுதமிழ்ப் பாமாலை பாடிடவே—துன்னுமடி
யானைமுக னறுமுக னன்புறுசே ஷாத்திரியெம்
மானிவர் தந் தாளிணையே வாழ்த்து.

## நூல்

மன்றுணட மாடுமலை மாமுனிவர் போற்றுமலை
நின்றுதொழு வார்வினைநீ றாக்குமலை—இன்றென்னை
நீதியொடு காத்து நிறைபெருமை யீந்தமலை
ஆதிமலை அண்ணு மலை. (1)

சம்பந்தர் போற்றுமலை சான்றோர்க ளேத்துமலை
கும்பந் தருமுனியுட் கொள்ளுமலை—இன்பமதைத்
தந்தே யெனையாண்டு தாழ்வில் வரமளித்த
அந்தமலை அண்ணு மலை. (2)

வல்லாளன் போற்றுமலை வானோர்க ளேத்துமலை
எல்லோரும் வந்தே இறைஞ்சுமலை—நல்லோர்கள்
போற்றுமலை நாயேன் புரியுங் குறைகளெலா
மாற்றுமலை அண்ணு மலை. (3)

மூவர்தமி ழேற்குமலை மூவுலகும் போற்றுமலை
பாவலர்கள் போற்றிப் பணியுமலை—பூமியிலென்
புந்திக் குறைதவிர்த்தே பொங்குமருள் தானளிக்கும்
அந்தமலை அண்ணு மலை. (4)

வல்வினையைப் போக்குமலை வஞ்சகரைத் தாக்குமலை
பல்வினைகள் ஓடப் பணியுமலை—சொல்லில்
தழைக்குமலை நாளும் தருவன்முத்தி வாவென்
றழைக்குமலை அண்ணு மலை. (5)

---

சென்னைச் சட்டக்கல்லூரி மாணவன்
**சி. க. துரைவேலன் B.A. (Hons) இயற்றியது**

## காப்பு

மானையிட பாகமுடை மன்னவனைப் பாடிடற்கே
ஆனைமுக னற்று ளரண்.

## வெண்பா

காருற்ற மாவரையே காணப் பொலிகின்ற
சீருற்ற தென்னருணைச் செல்வமே—பேருற்ற
நின்னரிய சீர்த்திதனை நேர்மையுறப் பாடிடவே
இன்னருட்செய் தேயளிப்பா யின்று. (1)

குற்றமே செய்திடினுங் கூர்ந்தென்பாற் சற்றேனுஞ்
செற்றமே கொண்டிலாத் தெய்வமே—நற்றவத்தோர்
மெய்யாம் பொருளெனவே மேவிடுமண் ணுமலைவாழ்
அய்யாநீ கண்பார்த் தருள். (2)

உன்னை மறக்கில்லே னோர்கால் மறக்கினும்நீ
என்னை மறந்தானு னென்செய்வேன்—மன்னுபுகழ்
அண்ணு மலையரசே அன்புடையாய் ஆண்டவநின்
தண்ணார் மலர்த்தாள் சரண். (3)

செல்வமுடன் கல்விதிட தேகமுநீ டாயுளுடன்
இல்வாழ்வி னல்வாழ்வா மின்பமதே—நல்லாய்
கருணைக் கடலேயென் கண்ணனையாய் தென்பால்
அருணைப் பதியாய் அருள். (4)

அம்மா வெனயா னழைத்தாலிங் கேனென்பார்
இம்மா நிலத்தி லெவருமிலர்—எம்மானே
நீயே யெனக்குற்ற நேசமிகு தாயதலாற்
சேயேன் றனக்கருளே செய். (5)

---

இஃது

## K. கல்யாண ராமசாஸ்திரியார் B.A. அவர்கள் இயற்றியது

வான்சொரிந்த நீர்மிக்க வாவியிலே நாட்கமலம்
தேன் சொரிந்து நிற்கும் திருவருணை—ஊன்சொரியும்
வீரத் திகிரியார் வேதனுந்தே டிக்காணு
ஊரத் திகிரியார் ஊர். (1)

அன்று புரஞ்செற்ற அண்ணு மலையாற்கு
நின்ற துணைவர்கள் நீள்நாகம்—குன்றம்
அரிதெரிவைத் தானுடையார் அன்னுர்வீ ணுகச்
சிரித்தெரிவைத் தாரச் சிவன். (2)

நாளும் புழைக்கைவி நாயகத்தை நல்குமறை
நாளும் புகழ்அருணை நாயகர்—மாளும்
திகைத்தப் புரத்தார் திறனழிய ஆங்கு
நகைத்தப் புரமெரித்தார் நன்கு. (3)

அன்ன வயல்சூழ் அணிசேர் திருவருணை
மன்னும் சிவற்கு மணியாரம்—பன்னகமாம்
தார்கண்ணி கொன்றையாந் தாரங் கருங்குவளை
வார்கண்ணி மையவ ளாம். (4)

ஆலால முண்டா யரண்தகர்த்தா யஞ்சடையாய்!
கோலா கலக்கூத்துக் கொண்டானே!—பாலாம்
மொழியாளின் பங்கனே! முக்கண்ணு! உன்றன்
அழியா அருளை அருள். (5)

---

வாழ்த்து.

வாழ்க நான்மறை வானவ ரந்தணர்
வாழ்க சோண மலைவளர் மாமுதல்
வாழ்க அன்பின் வழுத்து மடியவர்
வாழ்க மாமழை மன்னுயிர் வாழ்கவே.

இப்புத்தகம் வேண்டுவோர் நேரிலேனும் கடித மூலமேனும் அடியிற் காணும் விலாசத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

சி. கல்யாணம் அண்டு கம்பேனி,
நெ. 2, முத்து கிராமணி தெருவு,
பேரியமேட்டு, மதராஸ்.



The B. N. Press, Mount Road, Madras.